10th April 1958]

SRI P. G. MANICKAM : ஸார், கலப்பு மணம் செய்து கொள்ளும் உயர்ந்த ஜாதியினருக்குப் பரிசு கொடுக்க அரசாங்கம் கவனிக்குமா ?

MR. SPEAKER : இதற்குத் தனியாக ஒரு கேள்வி போடவேண்டும்.

*Market Committees*

* 689 *Q*.—SRI K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) the number of Market Committees in each district?

(*b*) the amount of business transacted in 1956 and 1957; and

(*c*) the main commodities marketted through these committees?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) A single market committee is constituted for a district. There are committees in South Arcot, North Arcot, Coimbatore, Tiruchirappalli, Tirunelveli and Ramanathapuram districts.

(*b*) The amount of business transacted in all the regulated markets was to the value of about Rs. 501 lakhs during 1956, and about Rs. 602 lakhs during 1957.

(*c*) The commercial crops marketted were cotton, groundnut and gingelly.

SRI K. SATTANATHA KARAYALAR : திருநெல்வேலி மார்க்கெட் கமிட்டி எந்தெந்த அக்ரிகல்சரல் பிராட்யூஸில் வியாபாரம் செய்கிறார்கள் ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : பருத்தி வியாபாரத்திலே கவனம் செலுத்தி வருகிறார்கள்.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : மற்ற ஜில்லாக்களில் இந்த கமிட்டி எப்போது அமுலுக்கு வரும் என்பதை அமைச்சர் அவர்கள் தெரிவிப்பார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ஜில்லாக்களில் அமுலுக்குக் கொண்டு வருவதைவிட மற்ற பயிர்களுக்கும் இதை அமுலுக்குக் கொண்டுவரலாமென்று யோசனையில் இருக்கிறது. இது நிபுணர்கள் கமிட்டியின் சிபாரிசுக்கு அனுப்பப்பட்டுவிட்டது. சிபாரிசு வந்தவுடன் சட்டத்தை மாற்றவேண்டியிருக்கும். அதை எவ்வளவு சீக்கிரமாகச் செய்யமுடியுமோ அவ்வளவு சீக்கிரமாக செய்ய முயற்சிக்கப்படும்.

SRI A.. GOVINDASAMY : தென் ஆற்காடு ஜில்லா மணிலா மார்க்கெட் கமிட்டி வியாபாரத்தை கவனிப்பதோடு நல்ல விதைகள் வழங்கி வந்தார்கள். அது இப்போது நிறுத்தப்பட்டுவிட்டது. மறுபடியும் நல்ல விதைகள் வழங்க ஏற்பாடு செய்வார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : நல்ல விதைகள் வழங்க வேண்டியதன் அவசியத்தை அரசாங்கம் உணருகிறது. அது விஷயத்திலும் கவனம் செலுத்தப்பட்டு வருகிறது.

SRI R. KRISHNASWAMI NAIDU : ராமநாதபுரம் மார்க்கெட் கமிட்டி செயல்பட்டு வருகிறதா அல்லது கோர்ட் அப்பீல் காரணமாக செயல்படுவது நிறுத்தப்பட்டிருக்கிறதா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ராமநாதபுரம் கமிட்டி சம்பந்தமாக சுப்ரீம் கோர்ட்டில் அப்பீல் செய்து தடை உத்தரவு பிறப்பித்திருக்கிறார்கள். அது செயல்படுவது இப்போது நிறுத்தப்பட்டிருக்கிறது.

*Textile mills.*

* 690 *Q.*—SRI K. RAMACHANDRAN : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) the present stage of the proposal to start Textile mills at Srivilliputhur in the Ramanathapuram district; and

(*b*) the estimated cost thereof and the subsidy, if any, sanctioned therefor by the Government?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) The Government of India have proposed to grant licence under the Industries (Development and Regulation) Act, 1951 to the Ramanathapuram Co-operative Spinning Mills, Srivilliputhur. But formal licence has not yet been issued. The first Board of Directors of the Mill has been nominated by the Registrar of Co-operative Societies. The Board is taking steps to select a site for the location of the mill and for the purchase of machinery for the proposed mill but nothing has been finalised yet.

(*b*) The approximate cost for the establishment of the mill will be Rs. 36 lakhs. The Government do not sanction any subsidy as such to Co-operative Spinning Mills.

SRI K. RAMACHANDRAN : இந்த ராமநாதபுரம் ஜில்லாவில் வைக்கப்பட வேண்டிய மில் அருப்புக்கோட்டையில் வைக்கவேண்டுமென்றிருந்தது. அது என் கைவிடப்பட்டு ஸ்ரீவில்லிபுத்தூரில் வைக்கப்படப் போகிறது ?

THE HON. SRI R. VENKATARAMAN : எனக்குத் தகவல் ஆரம்ப முதற்கொண்டே ஸ்ரீவில்லிபுத்தூரில் வைப்பதாகத் தான் பரிசீலனையில் இருப்பதாகத் தெரிகிறது.

SRI M. R. KANDASWAMI MUDALIYAR : இப்போதே கைத்தரித் துணிகள் தேங்கிக் கிடக்கும்போது, இன்னும் ஆலைகளைத் துவக்கி அவைகள் உற்பத்தி செய்தால், கைத்தறியை பாதிக்குமல்லவா ? இதை உணர்ந்து அரசாங்கம் தக்க நடவடிக்கை எடுக்குமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : இது நூல் ஆலை.

SRI M. D. RAMASWAMI : அருப்புக்கோட்டையில் ஒரு நூல் ஆலையை ஏற்படுத்த சர்க்கார் யோசனை செய்யுமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : இது ஒரு யோசனை. அவ்வளவுதான் சொல்ல முடியும்.

MR. SPEAKER : அடுத்த கேள்வி 691-ம் கேள்வி.

SRI M. R. KANDASWAMI MUDALIYAR : ஆன் எ பாயிண்ட் ஆப் இன்பர்மேஷன், ஸார், ஒரு விஷயத்திற்கு . . . .

MR. SPEAKER : கனம் அங்கத்தினர் தனி கேள்வி கேட்கலாம்.

*House-sites for Harijans*

* 691 *Q.*—SRI M. JAGANNATHAN : Will the Hon. the Minister for Public Works be pleased to state—

(*a*) how many cases of acquisition of land for house-sites in respect of (i) South Arcot district and (ii) Tindivanam taluk, are pending with the Harijan Welfare Department;